ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



श्रीमत्कृष्णसमाह्वाय नमो यामुनसूनवे ।
यत्कटाक्षैकलक्ष्याणां सुलभ: श्रीधरस्सदा ।।

## பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த சது:ஶ்லோகீ வ்யாக்யானம்

**அவதாரிகை:–** நம் த₃ர்ஶனத்துக்கு ப்ரத₄ாநம் ரஹஸ்யத்ரயமென்றும், ஶ்லோகத்₃வயமென்றும், சதுஶ்ஶ்லோகீ என்றும் நம் ஆசார்யர்கள் அருளிச் செய்து போருவர்கள். இதில் திருமந்த்ரத்தாலே ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூப மான புருஷார்த்த₂மும் ப்ரதிபாதி₃க்கப்படுகையாலே, அந்தப் புருஷார்த்த₂த்துக்கு

---

ஸ்ரீ:
ஸ்ரீமத் யாமுநமுநயே நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

**பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த**
**சது:ஶ்லோகீ வ்யாக்யானத்தின் விவரணம்**
**(ஸுதர்ஶனர் ஸ்ரீ.உ.வே.க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார்ஸ்வாமி)**

**ஸ்ரீமத் க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।**
**யத்கடாக்ஷைக லக்ஷ்யாணாம் ஸுலப₄: ஸ்ரீத₄ரஸ்ஸத₃ா॥**

**அவதாரிகா விவரணம்:**

நம்முடைய த₃ர்ஶனத்திற்கு முக்₂யமான ப்ரமாணங்கள் மூன்று ரஹஸ்யங்கள் என்றும், இரண்டு ஶ்லோகங்கள் என்றும், நாலு ஶ்லோகங்கள் என்றும் நம் ஆசார்யர்கள் அருளிச்செய்வர்கள். திருமந்த்ரம், த்₃வயம், சரமஶ்லோகம் என்பவை மூன்று ரஹஸ்யங்கள். ஸ்ரீவராஹப்பெருமான் சேதனர்கள் உஜ்ஜீவிப்பதற்காக பூமிப்பிராட்டிக்கு அருளிச்செய்த 'ஸ்திதே மநஸி' என்று தொடங்கும் இரண்டு ஶ்லோகங்கள் ஶ்லோகத்₃வயம் எனப்படும். ஆளவந்தார் பிராட்டியின் பெருமையை 'காந்தஸ்தே' என்று தொடங்கி நாலு ஶ்லோகங்களால் அருளிச்செய்தது சது:ஶ்லோகீ எனப்படும். இதில் திருவஷ்டாக்ஷரம் எனப்படும் எட்டெழுத்துக்கொண்ட திருமந்த்ரத்தாலே ஜீவாத்மாவினுடைய ஸ்வரூபமும், அந்த ஸ்வரூபத்துக்குத் தக்க பயனும் சொல்லப்

உபாயசிந்தை பண்ணுகிறது சதுஶ்ஶ்லோகியாலும், ஶ்லோகத்3வயத்தாலும். இவ்விடத்தில் சதுஶ்ஶ்லோகியால் செய்கிறது என்னென்றால்; நம்பெருமாளுக்கு தே3வதாந்தரங்களைக்காட்டிலும் வாசி மோக்ஷப்ரத3த்வம், ஜக3த்காரணத்வம் என்கிற இவை; இவைதான் எத்தாலே வந்ததென்றால்; ஶ்ரிய:பதித்வ நாராயணத்வங்களாலே வந்த பரத்வாதி3கு3ணங்களாலே என்கை. வேத3ார்த்த2மாயிருந்துள்ள அர்த்த2பஞ்சகத்துக்கு விவரணமான ஸ்ரீவிஷ்ணு புராணத்திற்கு......* பர்யாலோசநம் பண்ணியிருந்துள்ள ஆளவந்தார் ஸ்தோத்ரீகரித்து, ஶ்ரிய:பதித்வநிப3ந்த4நமான ஸௌலப்4யாதி3 கு3ணங்களை அநுப4விக்கிறார் சதுஶ்ஶ்லோகியாலே. இதில் முதல் ஶ்லோகத்தால் பிராட்டியினுடைய நாராயண ஸம்ப3ந்த4நிப3ந்த4நமான பரத்வம் ப்ரதிபாதி3க்கப் படுகிறது. இரண்டாம் ஶ்லோகத்தாலே அந்தப் பரத்வத்தை அனுப4வித்துக் கொண்டு பிராட்டியுடைய புருஷகாரத்வம் சொல்லப்படுகிறது. மூன்றாம் ஶ்லோகத்தாலே இப்படிக்கொத்த ஸௌலப்4யாதி3 கு3ணங்களையுடைய

---

படுகையாலே, அந்த பலனைப் பெறுவதற்கு உபாயத்தை விளக்குவது சது:ஶ்லோகியும், இரண்டு ஶ்லோகங்களடங்கிய வராஹசரமஶ்லோகமும். இங்கு சது:ஶ்லோகியால் செய்யப்படுவது என்னவென்றால்; நம்பெருமாளுக்கு மற்ற தே3வதைகளைக் காட்டிலும் சிறப்பு 1) மோக்ஷத்தை அளிப்பவனாயிருக்கை, 2) உலகிற்கு காரணமாயிருக்கை என்கிற இவை. பெருமாளுக்கு உள்ள இச்சிறப்புக்கள் எதனாலே வந்ததென்றால் திருமகள்கேள்வனாயிருக்கை, நாராயணனாயிருக்கை ஆகியவற்றால் உண்டான பரத்வம், ஸௌலப்3யம் முதலான கு3ணங்களாலே என்றபடி. வேத3ம் முதலான ஶாஸ்த்ரங்களில் 1) அடையத்தக்க பரப்3ரஹ்மத்தின் ஸ்வரூபம், 2) அடைபவனாகிற ஜீவாத்மாவின் ஸ்வரூபம், 3) அடைவதற்கு வழி 4) அடைந்து பெறும் பயன், 5) அடைவதற்குத் தடையான விரோதி4கள் என்னும் ஐந்து அர்த்த2ங்கள் சொல்லப் பட்டுள்ளன. அந்த ஐந்து அர்த்த2ங்களையும் ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலான ப்ரமாணங் கள் விவரிக்கின்றன. ஆளவந்தார் அவற்றை நன்கு ஆராய்ந்து, இரண்டு ஸ்தோத்ரங்கள் மூலமாக அருளிச்செய்யமுற்படுகிறார். அவ்விரண்டு ஸ்தோத்ரங்களில், பிராட்டியைக் குறிக்கும் சது:ஶ்லோகியாலே திருவின் நாயகனாயிருப்பதால் எம்பெருமானுக்குண் டான ஸௌலப்4யம், ஸௌஶீல்யம் முதலான நீர்மை கு3ணங்களை அநுப4விக்கிறார்.

இந்த சது:ஶ்லோகியின் முதல் ஶ்லோகத்தால் நாராயணனுடைய பத்நியாயிருக்கையால் பிராட்டிக்குண்டான மேன்மை சொல்லப்படுகிறது. இரண்டாம் ஶ்லோகத்தாலே அந்த மேன்மையை அநுப4வித்துக்கொண்டு பிராட்டியினுடைய புருஷகாரமாய் (சேதனனை எம்பெருமானோடு சேர்ப்பவளாய்) இருக்கும் தன்மை சொல்லப்படுகிறது. மூன்றும் ஶ்லோகத்தாலே இப்படிப்பட்ட நீர்மையையும், மேன்மையையும் உடைய பெரியபிராட்டியாருக்கு, எம்பெருமான் உலகுக்குக்

* இக்குறியுள்ளவிடத்தில் சில பத3ங்கள் விட்டுப்போயிருக்கின்றன.

பெரியபிராட்டியாருக்கு ஜக$_3$த்காரணத்வத்திலும் அந்தர்ப$_4$ாவமுண்டு என்னுமிடத்தைச் சொல்லி உபாயகீர்த்தனம் பண்ணப்படுகிறது. நாலாம் ஶ்லோகத்தாலே கீழ்ச்சொன்ன உபாய......* படுவதாயிருந்துள்ள ப$_2$லஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது.

**ஆளவந்தார் அருளிச்செய்த சது:ஶ்லோகீ**

कान्तस्ते पुरुषोत्तमः फणिपतिः शय्याऽऽसनं वाहनं
वेदात्मा विहगेश्वरो यवनिका माया जगन्मोहिनी ।
ब्रह्मेशादिसुरव्रजस्सदयितस्त्वद्दासदासीगणः
श्रीरित्येव च नाम ते भगवति ब्रूमः कथं त्वां वयम् ।।

**வ்யா:–** (காந்தஸ்தே புருஷோத்தம:) பிராட்டியை நிரூபிக்கும்போது

---

காரணமாகும்போதும் தொடர்பு உண்டு என்றுசொல்லி பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு பற்றுபவர்க்கு எம்பெருமான் மோக்ஷோபாயமாகிருன் என்று சொல்லப் படுகிறது. நாலாவது ஶ்லோகத்தாலே, கீழ்ச் சொன்னபடி எம்பெருமாஞை உபாயமாகவும் பிராட்டியை புருஷகாரமாகவும் பற்றுகிறவர்கள் அடையும் பலன் நிரூபிக்கப்படுகிறது.

காந்தஸ்தே புருஷோத்தம: ப$_2$ணிபதிஶ் ஶய்யா஽஽ஸநம் வாஹநம்
வேத$_3$ாத்மா விஹகே$_3$ஶ்வரோ யவநிகா மாயா ஜக$_3$ந்மோஹிநீ ।
ப்ரஹ்மேஶா$_3$திஸூரவ்ரஜஸ் ஸத$_3$யிதஸ் த்வத்$_3$த$_3$ாஸத$_3$ாஸீக$_3$ண:
ஸ்ரீரித்யேவ ச நாம தே ப$_4$க$_3$வதி ப்$_3$ரூம: கத$_2$ம் த்வாம் வயம் ॥

பதவுரை:– <u>ப$_4$க$_3$வதி</u> – கல்யாணகு$_3$ணங்களால் நிறைந்தவளே!, <u>புருஷோத்தம:</u> – புருஷோத்தமஞன ப$_4$க$_3$வான், <u>தே</u> – உனக்கு, <u>காந்த:</u> –பிரியஞன கணவன், <u>ப$_2$ணிபதி:</u> – நாகங்களுக்கு அரசஞன ஆதிஶேஷன், <u>ஶய்யா</u> – படுக்கை, <u>வேத$_3$ாத்மா</u> – வேத$_3$த்தை ஶரீரமாக உடையவனும், <u>விஹகே$_3$ஶ்வர:</u> – புள்ளரையனுமான பெரியதிருவடி, <u>ஆஸநம் வாஹநம்</u> – ஆஸனமாகவும், வாஹனமாகவுமிருப்பவன்; <u>ஜக$_3$ந்மோஹிநீ</u> – உலகத்தை மோஹிக்கச் செய்வதான, <u>மாயா</u>– ப்ரக்ருதி, <u>யவநிகா</u> – (உனக்கு) முக$_2$த்திரையாயிருக்கிறது; <u>ஸத$_3$யித:</u> – தங்களுடைய மனைவிமாருடன் கூடிய, <u>ப்ரஹ்மேஶாதி$_3$ஸூரவ்ரஜ:</u> –பிரமன், சிவன் முதலிய தே$_3$வஸமூஹம், <u>த்வத்த$_3$ாஸத$_3$ாஸீக$_3$ண:</u> – உன்னுடைய த$_3$ாஸக$_3$ணமாகவும், த$_3$ாஸீக$_3$ணமாகவும் இருக்கிறது; <u>தே நாம ச</u> – உன்னுடைய திருநாமமும், <u>ஸ்ரீ: இதி ஏவ</u> – ‘ஸ்ரீ:’ என்பதேயாயிருக்கிறது; <u>த்வாம்</u> – (இப்படிப்பட்ட பெருமைகள் பொருந்திய) உன்னை, <u>வயம்</u> – (அறிவிலிகளான) நாங்கள், <u>கத$_2$ம் ப்$_3$ரூம:</u> – எப்படிச் சொல்லுவோம்?

வ்யா:– (காந்தஸ்தே புருஷோத்தம:) பிராட்டியின் தனித்தன்மையைச்

---

*இக்குறியுள்ளவிடத்தில் சில பத$_3$ங்கள் விட்டுப்போயிருக்கின்றன.

எம்பெருமானுடைய ஸம்ப$_3$ந்த$_4$நிப$_3$ந்த$_4$நநிரூபணம் பண்ணவேணும். இவனையும் இவளுடைய ஸம்ப$_3$ந்த$_3$த்தாலே என்றும் நிரூபிக்கவேண்டும். அதெங்ஙனே என்னில்: ''க: ஸ்ரீ: ஶ்ரிய:'' என்றும், ''ஶ்ரிய: ஶ்ரியம் ப$_4$க்தஜநைக ஜீவிதம்'' என்றும், ''திருவுக்கும் திருவாகிய செல்வா'' என்றும், ''என்திருமகள் சேர் மார்வனே என்னும்'' என்றும் சொல்லுகையாலே. பிராட்டியை நிரூபிக்கும் போதும் ''காந்தஸ்தே புருஷோத்தம:'' என்னும்படியாயிறே இருப்பது. ''ப$_4$ர்த்தா தே புருஷோத்தம:'' என்னாதே, ''காந்தஸ்தே புருஷோத்தம:'' என்பானென்? என்றால்: ''ராக$_4$வோऽர்ஹதி வைதே$_3$ஹீம் தம் சேயமஸிதேக்ஷணா'' என்றும், ''ப$_4$க$_3$வந்நாராயணாபி$_4$மதாநுரூபஸ்வரூபரூபகு$_3$ணவிப$_4$வைஶ்வர்ய ஶீலாத்$_3$யநவதி$_4$காதிஶயாऽஸங்க்$_2$யேயகல்யாணகு$_3$ணக$_3$ணாம்'' என்றும்,

---

சொல்லும்போது, எம்பெருமானுடைய பத்நி என்று அவனுடைய தொடர்பைக் கொண்டே விளக்கவேண்டும். எம்பெருமானுடைய தனித்தன்மையைச் சொல்லும் போது பிராட்டியின் நாயகன் (கணவன்) என்று அவளுடைய தொடர்பைக்கொண்டே விளக்கவேண்டும். அதெப்படியெனில் ''க: ஸ்ரீ: ஶ்ரிய: (ஸ்தோ.ரத்.12) [திருவுக்கும் திருவாகியவன் யார்?] என்றும், ''ஶ்ரிய: ஶ்ரியம் ப$_4$க்தஜநைகஜீவிதம்'' (ஸ்தோ.ரத்.45) [''திருவுக்கும் திருவாகவும் பக்தஜநங்களுக்கு ஒருயிராகவும்] என்றும் 'திருவுக்கும் திருவாகிய செல்வா' (பெரிய திரு.7–7–1) என்றும், 'என் திருமகள்சேர்மார்வனே' (திருவாய் 7–2–9) என்றும் ஆழ்வார்களும், ஆசார்யர்களும் அருளிச்செய்கையாலே பிராட்டியின் ஸ்வரூபத்தை நிரூபிக்கும்போது இவ்விடத்திற் போலே எம்பெருமானையிட்டே நிரூபிக்கவேண்டியிருக்கிறது. 'ப$_4$ர்த்தா தே புருஷோத்தம:' என்று கூருமல் 'காந்தஸ் தே புருஷோத்தம: என்று கூறுவான் என்னென்னில்;

துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபி$_4$ஜநலக்ஷணாம் ।
ராக$_4$வோऽர்ஹதி வைதே$_3$ஹீம் தம் சேயமஸிதேக்ஷணா॥'' (ரா.ஸு.16–5)

[ஒரே விதமான கு$_3$ணங்கள், வயது, நடத்தை இவைகளை உடையவளும், ஸமானமான குலத்தையும், லக்ஷணங்களையும் உடையவளுமான வைதே$_3$ஹிக்கு ராக$_4$வனே தகுந்தவர். கறுத்த கண்களை உடைய இவளும் அவருக்கே தகுந்தவள்.] என்றும்,

''ப$_4$க$_3$வந்நாராயணாபி$_4$மதாநுரூபஸ்வரூபரூபகு$_3$ணவிப$_4$வைஶ்வர்ய ஶீலாத்$_3$ய நவதி$_4$காதிஶயாऽஸங்க்$_2$யேயகல்யாணகு$_3$ணக$_3$ணாம் பத்$_3$மவநாலயாம் ப$_4$க$_3$வதீம் ஶ்ரியம் தே$_3$வீம் நித்யாநபாயிநீம் நிரவத்$_3$யாம் தே$_3$வதே$_3$வதி$_3$வ்யமஹிஷீம் அகி$_2$ல ஜக$_3$ந்மாதரம் அஸ்மந்மாதரம் அஶரண்யஶரண்யாம் அநந்யஶரண: ஶரணமஹம் ப்ரபத்$_3$யே॥'' (ஶரணாக$_3$தி க$_3$த்$_3$யம்–1)

[ப$_4$க$_3$வானான நாராயணனுக்கு இஷ்டமாகவும், தகுந்ததாகவுமுள்ள ஸ்வரூபம், ரூபம், (ரூப) கு$_3$ணம், விபூ$_4$தி, ஐஶ்வர்யம், ஶீலம் முதலான எல்லையற்ற மேன்மையை யுடையவையும்,கணக்கற்றவையுமான கல்யாணகு$_3$ணக$_3$ணங்கள், இவற்றை உடையவளும், பத்$_3$மவனத்தை இருப்பிடமாக உடையவளும், பூஜிக்கத்தக்கவளும்,

''ஸ்ரீவல்லப$_4$'' என்றும், ''பே$_4$ாகே$_3$ாபோத்$_3$க$_4$ாதகேளீசுளகித ப$_4$க$_3$வத்$_3$வைஶ்வ ரூப்யாநுப$_4$ாவா'' என்றும், ''உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ'' என்றும், ''பித்தர் பனிமலர் மேல் பாவைக்கு'' என்றும் ப்ரயோக$_3$ம் பண்ணுகிறுர்களிறே.

''ஹரி:'' என்னுதல், ''விஷ்ணு:'' என்னுதல், செய்யாதே ''புருஷோத்தம:'' என்பானென்? என்ருல்; ''த்$_3$வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச க்ஷரஸ்ஸர்வாணி பூ$_4$தாநி கூடஸ்தே$_2$ாக்ஷர உச்யதே॥ உத்தம: புருஷஸ்த்வந்ய:

---

*எப்போதும் (எம்பெருமானை விட்டு) அகலகில்லாதவளும், தோ$_3$ஷமற்ற வளும், தே$_3$வதே$_3$வனுன எம்பெருமானுடைய தி$_3$வ்யமஹிஷியும், எல்லாவுல கிற்கும் தாயாயிருப்பவளும், (விஶேஷமாக) எனக்குத் தாயாயிருப்பவளும், க$_3$தியற்றவர்களுக்கு க$_3$தியாயிருப்பவளுமான ஸ்ரீதே$_3$வியை, (வேறொரு) க$_3$தியற்ற அடியேன் ஶரணமடைகிறேன்.]என்றும், ''ஸ்ரீவல்லப$_4$'' (ஶரணுக$_3$தி க$_3$த்யம்–6) [பெரியபிராட்டியாருக்கு வல்லப$_4$ணுயிருப்பவனே!] என்றும் ''*

*யத்$_3$ப்$_4$ரூப$_4$ங்கா: ப்ரமாணம் ஸ்தி$_2$ரசரரசநாதாரதம்யே முராரே:*
*வேத$_3$ாந்தாஸ் தத்த்வசிந்தாம் முரபி$_4$து$_3$ரஸி யத்பாத$_3$சிஹ்நைஸ் தரந்தி ।*
*பே$_4$ாகே$_3$ாபோத்$_3$க$_4$ாதகேளீ சுளகித ப$_4$க$_3$வத்$_3$வைஶ்வரூப்யாநுப$_4$ாவா*
*ஸா ந: ஸ்ரீராஸ்த்ருணீதாமம்ருத லஹரிதீ$_4$லங்க$_4$நீயைர பாங்கை$_3$: ॥*
*(ஸ்ரீகு$_3$ணரத்நகோஶம் 4)*

*[முராரியின் ஸ்த$_2$ாவர ஜங்க$_3$மாத்மகமான ஜக$_3$த்ஸ்ருஷ்டியில் உயர்வுதாழ்வு களுக்கு எவளுடைய புருவநெரிப்பு காரணமாயிருக்கிறதோ, முராரியின் திருமார்பில் எவளுடைய திருவடியடையாளங்களைக் கண்டு வேத$_3$ாந்தங்கள் பரதத்த்வவிசாரணையை முடிக்கின்றனவோ, ப$_4$க$_3$வானுடைய விஶ்வரூபாநு ப$_4$வத்தையும், தன்னுடைய பே$_4$ாக$_3$ாரம்ப$_4$மாகிற விளையாட்டாலே கையள வாக ஆக்குபவளான அந்த ஸ்ரீதே$_3$வி, அம்ருதக்கடலலைகளை வென்ற கடாக்ஷங்களாலே என்னைக் குளிப்பாட்டுவாளாக.] என்றும், 'உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ' (திருவாய் 10–10–6) என்றும், 'பித்தர் பனிமலர் மேல் பாவைக்கு' (திருநெடு 18) என்றும் ரிஷிகளும், ஆசார்யர்களும், ஆழ்வார்களும் வழங்குகிறுர்களன்றோ.*

*ஹரி: என்றோ, விஷ்ணு: என்றோ அருளிச்செய்யாமல், புருஷோத்தம: என்று அருளுவதற்குக் காரணம் என்னவெனில்;*

*த்$_3$வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச ।*
*க்ஷரஸ் ஸர்வாணி பூ$_4$தாநி கூடஸ்தே$_2$ாக்ஷர உச்யதே॥*

பரமாத்மேத்யுத3ாஹ்ருத:। யோ லோகத்ரயமாவிஶ்ய பி3ப4ர்த்யவ்யய ஈஶ்வர:॥ யஸ்மாத் க்ஷரம்'' இத்யாதி3; ''அசித்தானது, ஸ்வரூபாந்யதா2பா4வயுக்தமாயிருக்கும்; சித்தானது ஸ்வபா4வாந்யதா2பா4வயுக்தமாயிருக்கும்; ஆக, உப4யாந்யதா2பா4வ ரஹிதன் ஈஶ்வரன் என்று கொண்டு, தனக்கு விபூ4திபூ4தமான சேதநாசேதந விலக்ஷணனென்றிட்டு ''புருஷோத்தம:'' என்கிறதன்றோ'' என்கிறார்.

(ப2ணிபதிஶ் ஶய்யா) ஒரு ராஜாவுக்கு அபி4மதையாயிருப்பாளொருத்தி, கண்டபோது ரஸிப்பதித்தனையொழிய ஒரு படுக்கையில் ஏறப்பெறாதேயாய்த்து இருப்பது. அங்ஙனன்றிக்கே, ''ப4க3வந்நாராயணாபி4மதாநுரூபஸ்வரூபரூப''

---

உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத்யுத3ாஹ்ருத:।
யோ லோகத்ரயமாவிஶ்ய பி3ப4ர்த்யவ்யய ஈஶ்வர:॥
யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராத3பி சோத்தம:।
அதோऽஸ்மி லோகே வேதே3 ச ப்ரதி2த: புருஷோத்தம:॥(கீ3தை 15.16–18)

[க்ஷரன் என்றும், அக்ஷரன் என்றும் லோகத்தில் புருஷர்கள் இருவித4மானவர்கள், எல்லாபூ4தங்களும் க்ஷரனாகும். கூடஸ்த2னை முக்தாத்மா அக்ஷரனெனப்படுகிறான். எவனொருவன் மூவுலகங்களிலும் நுழைந்து (அவற்றை) த4ரிப்பவனாகவும், குறைவற்றவனாகவும், நியமிப்பவனாகவும் பரமாத்மா என்று சொல்லப்படுபவனாகவும் விளங்குகிறானோ, அந்த புருஷோத்தமன் (முன் சொல்லப்பட்ட புருஷர்களைக்காட்டிலும்) வேறுபட்டவன். நான் ஞானத்தில் ஏற்றக்குறைவுகளுள்ள க்ஷரபுருஷனை அதிக்ரமித்திருப்பதாலும், ஞானத்தில் ஏற்றக்குறைவுகளற்ற முக்தபுருஷனைக்காட்டிலும் மேலானவனாயிருப்பதாலும், ஶ்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் புருஷோத்தமனென்று பிரஸித்3தி4 பெற்றிருக்கிறேன்.] என்னும் கீ3தா ஶ்லோகத்தின்படி ''அசேதநப் பொருளானது ஸ்வரூபத்திலேயே மாறுதலடையக் கூடியதாயிருக்கும். சேதனன் தன்னுடைய தன்மையான த4ர்மபூ4த ஜ்ஞானத்திலே மாறுதலடையக் கூடியவனாயிருப்பான். ஈஶ்வரன் ஸ்வரூபத்திலோ, ஸ்வபா4வத்திலோ வேறுபாடு அடையாதவனாகையாலே, தன் செல்வமான சேதநாசேதநங்களைக் காட்டிலும் சிறந்தவன் என்னும் காரணத்தாலே புருஷோத்தமன் என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுபவனன்றோ என்கிறார்.

(ப2ணிபதிஶ்ஶய்யா) பலமனைவியரை உடைய ஒரு அரசனுக்கு பட்டமஹிஷியைத் தவிர்ந்த மற்ற மனைவியர், கண்டபோது ரஸிக்கத்தக்கவர்களாயிருப்பார்களேயொழிய அரசனுக்குரிய படுக்கையிலே ஏற உரிமையற்றவர்களாகவேயிருப்பர்கள். அப்படியல்லாமல் ஏற்கனவே எடுக்கப்பட்ட

என்றும், 'உனக்கேற்கும் கோலமலர்ப் பாவை' என்றும் ''ராக$_4$வோऽர்ஹதி வைதே$_3$ஹீம்'' என்றும் இப்படி ப்ரமாணம் உண்டாகையாலே கேவலம் அபி$_4$மதையான மாத்ரமன்றிக்கே, அநுரூபையுமாயிருக்கையாலே அவனுக்கான படுக்கை இவளுக்கும் ப்ராப்தமென்கிறார். (ப$_2$ணிபதி:) என்கையாலே, ''அகாரேணோச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோகேஶ்வரோ ஹரி:। உத்$_3$த்$_4$ருதா விஷ்ணுநா லக்ஷ்மீ ருகாரேணோச்யதே ஸதா$_3$॥ மகாரஸ்து தயோர் தா$_3$ஸ இதி ப்ரணவ லக்ஷணம்॥'', ''ப$_4$வாம்ஸ்து ஸஹ வைதே$_3$ஹ்யா கி$_3$ரிஸாநுஷு ரம்ஸ்யதே। அஹம் ஸர்வம் கரிஷ்யாமி'' என்றும் சொல்லுகிறபடியே ஆத்மவஸ்துவுக்கு ஒரு மிது$_2$ந ஶேஷத்வம் பரமபுருஷார்த்த$_2$மாகையாலே, இங்கும் வாஸுகிதக்ஷகப்ரப்$_4$ருதிகளான அஷ்டமஹாநாக$_3$ங்களுக்குப்

*''ப$_4$க$_3$வந்நாராயணாபி$_4$மதாநுரூபஸ்வரூப ரூப கு$_3$ண விப$_4$வைஶ்வர்ய ஶீலாத்$_3$யநவதி$_4$காதிஶயாऽஸங்க்யேயகல்யாணகு$_3$ணக$_3$ணாம்'' (ஶரணாக$_3$தி க$_3$த்யம்–1) ''ராக$_4$வோர்ऽஹதி வைதே$_3$ஹீம் தம் சேயமஸிதேக்ஷணா'' (ரா.ஸு 16–5) முதலான ப்ரமாணங்களின்படியும் உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை என்னும் அருளிச்செயலின்படியும் இவள் பட்டமஹிஷியாகையாலே மற்ற மனைவியரைப்போலே இனியவளாகமட்டுமிராமல், அவனுக்குத் தகுந்த வளாக இருக்கையாலே, அவனுடைய படுக்கையான ஆதிஶேஷன் இவளுக் கும் படுக்கையாகும் என்கிறார். (ப$_2$ணிபதி:) ஆதிஶேஷன் என்று ஶேஷபூ$_4$தர் களில் தலைவன் என்கையாலே*

*அகாரேணோச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோகேஶ்வரோ ஹரி: ।*
*உத்$_3$த்$_4$ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணோச்யதே ஸதா$_3$॥*
*மகாரஸ்து தயோர் தா$_3$ஸ இதி ப்ரணவலக்ஷணம்॥'' (ஶ்ருதி)*

*[ஸர்வலோகங்களுக்கும் ஈஶ்வரனும் ஹரியென்றும், விஷ்ணு என்றும் சொல்லப்படுபவனுமான எம்பெருமான் அகாரத்தினால் சொல்லப்படுகிறான். விஷ்ணுவினால் (மார்பில்) எப்போதும் த$_4$ரிக்கப்பட்டிருப்பவளான லக்ஷ்மி உகாரத்தினால் சொல்லப்படுகிறாள். அவர்களுக்கு தா$_3$ஸனான ஜீவன் மகாரவாச்யன் என்பதே ப்ரணவத்தின் லக்ஷணம்],*

*''ப$_4$வாம்ஸ்து ஸஹ வைதே$_3$ஹ்யா கி$_3$ரிஸாநுஷு ரம்ஸ்யதே।*
*அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்$_3$ரதஸ் ஸ்வபதஶ்ச தே॥ (ரா.அ.31–25)*

*[நீர் வைதே$_3$ஹியுடன் கூட மலைத்தாழ்வரைகளில் விளையாடுவீர்; அடியேன் நீர் விழித்துக் கொண்டிருக்கும்போதும், தூங்கும்போதும் உமக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்] என்கிறபடியே ஜீவாத்மாவானது பிராட்டியும், பரமாத்மாவுமாகிற இருவருக்கும் அடிமைப்பட்டிருப்பது மேலான பயனாகையாலே, இங்கும் வாஸுகி, தக்ஷகன் முதலான பெரிய மஹாநாக$_3$ங்*

பரிப்$_3$ருட$_4$ணய், ஶேஷபூ$_4$தருக்கும் தலையாயிருந்துள்ள திருவநந்தாழ்வான், இருக்கும் போது உன் திருப்படுக்கை என்கிறார்.

(ஆஸநம் வாஹநம் வேத$_3$ாத்மா விஹேகே$_3$ஶ்வர:) ''ஸுபர்ணோऽஸி க$_3$ருத்மாந் த்ரிவ்ருத்தே ஶிரோ க$_3$ாயத்ரம் சக்ஷு: ஸ்தோம ஆத்மா ஸாம தே தநூர் வாமதே$_3$வ்யம் ப்$_3$ருஹத்$_3$ ரத$_2$ந்தரே பக்ஷௌ யஜ்ஞாயஜ்ஞியம் புச்ச$_2$ம் ச$_2$ந்த$_3$ாம்ஸ்யங்க$_3$ாநி தி$_4$ஷ்ணியாஶ்ஶப$_2$ா யஜூம்ஷி நாம'' என்கிறபடியே நாக$_3$ஜாதிகளுக்கு நாயகனை அநந்தன் திருப்படுக்கையானாப்போலே, இங்கும் வேத$_3$மயனாய் பறவைகளுக்கு ஆத$_4$ாரனாயிருந்துள்ள பெரியதிருவடி இவளுக்கு ஆஸநவாஹனங்கள் என்கிறார். அபி$_4$மதையானால் படுக்கையில் அணைக்க ப்ராப்தமாயிருக்கும்; ஏகாஸநத்திற்கொண்டு இருக்க யோக்$_3$யையயன்றிக்கே யாய்த்து இருப்பது. அங்ஙனன்றிக்கே, ''வைகுண்டே$_2$ து பரே லோகே ஶ்ரியாஸார்த்த$_4$ம் ஜக$_3$த்பதி:। ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா ப$_4$க்தைர் ப$_4$ாக$_3$வதைஸ் ஸஹ'' என்கிறபடியே இவள் அநுகூலரூபையாயிருக்கையாலே இவனுக்கான

---

களுக்குத் தலைவனாய், அடிமைப்பட்டவர்களுக்கும் தலைவனாய் இருக்கும் திருவநந்தாழ்வான் உனக்கு படுக்கையாகிறான்.

*(ஆஸநம் வாஹநம் வேத$_3$ாத்மா விஹகே$_3$ஶ்வர:)*

*''ஸுபர்ணோऽஸி க$_3$ருத்மாந் த்ரிவ்ருத்தே ஶிரோ க$_3$ாயத்ரம் சக்ஷு: ஸ்தோம ஆத்மா ஸாம தே தநூர் வாமதே$_3$வ்யம் ப்$_3$ருஹத் ரத$_2$ந்தரே பக்ஷௌ யஜ்ஞாயஜ்ஞியம் புச்ச$_2$ம் ச$_2$ந்த$_3$ாம்ஸ்யங்க$_3$ாநி தி$_4$ஷ்ணியாஶ்ஶப$_2$ா யஜூம்ஷி நாம। (தைத்.யஜுஸ்ஸம்ஹிதை 4–1–42)*

[வேத$_3$த்தின் பல பாகங்களை கருடனுடைய பல அவயவங்களாகக் கூறுவது இந்த மந்த்ரம்.] என்னும் வேத$_3$வாக்யத்தின்படியே நாக$_3$ங்களுக்குத் தலைவனை திருவநந்தாழ்வான் படுக்கையானதுபோலே, வேத$_3$ஸ்வரூபனாய் பறவைகளுக்குத் தலைவனாய், ஆத$_3$ாரனாய் இருக்கும் கருடன் இவளுக்கு ஆஸநமாகவும், வாஹநமாகவும் இருக்கிறார். அரசனுக்கு இனிய மனைவியாக மட்டுமிருந்தால் படுக்கையில் அணைக்கத் தகுதிபெற்றிருப்பாளேயொழிய வீற்றிருக்கும் ஸிம்ஹாஸனத்தில் கூடியிருப்பதற்குத் தகுதியற்றவளாகவன்றோ இருப்பாள். அப்படியல்லாமல்

*வைகுண்டே$_2$து பரே லோகே ஶ்ரியாஸார்த்த$_4$ம் ஜக$_3$த்பதி:।*
*ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா ப$_4$க்தைர் ப$_4$ாக$_3$வதைஸ் ஸஹ।। (ஶைவம்)*

[மேலான உலகமான வைகுண்ட$_2$த்தில் ஜக$_3$த்பதியும், நினைக்கவொண்ணாத ஸ்வரூபத்தை உடையவருமான விஷ்ணு, ப$_4$க்தர்களுடனும், ப$_4$ாக$_3$வதர்களுடனும் கூடியவராய், ஸ்ரீதே$_3$வியுடன் கூட எழுந்தருளியிருக்கிறார்] என்கிற படியே இவள் எம்பெருமானுக்கு பட்டமஹிஷியாகவும் இருக்கையாலே

ஆஸநமும், வாஹனமும் இவளுக்கும் ப்ராப்தம் என்று அருளிச்செய்கிறார்.

ஆக, இப்படிக் கீழ்ச்சொன்ன யுக்திகளாலே பிராட்டிக்கு நித்யவிபூ$_4$தி ஸம்ப$_3$ந்த$_4$ம் சொல்லப்பட்டது. இனி மேல் ஶ்லோகத்தாலே லீலாவிபூ$_4$தியோக$_3$மென்ன, தத$_3$ந்தர்வர்த்திகளாயிருந்துள்ள ப்$_3$ரஹ்மருத்$_3$ராதி$_3$ தே$_3$வக$_3$ணங்களுடைய ஶேஷத்வமென்ன இவை சொல்லப்படுகிறது. அதெங்ஙனேயென்றால்; (யவநிகா மாயா ஜக$_3$ந்மோஹிநீ) ''மாயாம் து ப்ரக்ருதிம் வித்$_3$யாந்மாயிநம் து மஹேஶ்வரம்'' என்றும், ''இந்த்$_3$ரோ மாயாபி$_4$: புருரூப ஈயதே'' என்றும், ''தை$_3$வீ ஹ்யேஷா கு$_3$ணமயீ மம மாயா து$_3$ரத்யயா மாமேவ யே ப்ரபத்$_3$யந்தே மாயாமேதாம் தரந்தி தே।'' என்றும் இத்யாதி$_3$களாலே ப்ரதிபாதி$_3$க்கப்பட்டிருக்கிற ப$_4$க$_3$வந்மாயையன்றோ உனக்கு யவநிகை. ஒருதிரையின் உள்ளிருக்கும்

---

எம்பெருமானுடைய ஆஸநமும், வாஹநமும் இவளுக்கும் அமைந்திருக்கிறது என்று அருளிச்செய்கிறார்.

ஆக, இதுவரையில் சொன்ன லோகந்யாயங்களாலே பிராட்டிக்கு நித்யவிபூ$_4$தியில் உள்ள பெருமை சொல்லப்பட்டது. இனி, இந்த ஶ்லோகத்தின் எஞ்சிய பகுதியாலே இவளுக்கு லீலாவிபூ$_4$தியோடு ஸம்ப$_3$ந்த$_4$மும், அதனுள்ளிருக்கும் பிரமன், உருத்திரன், முதலான தே$_3$வஸமூஹங்கள் அடிமைப்பட்டிருப்பதும் சொல்லப்படுகிறது. எப்படியென்னில்; *(யவநிகா மாயா ஜக$_3$ந்மோஹிநீ)*

*மாயாந்து ப்ரக்ருதிம் வித்$_3$யாந் மாயிநந்து மஹேஶ்வரம் (ஶ்வேதா 4–10)*

[ப்ரக்ருதியை, ஆஶ்சர்யமான ஸ்ருஷ்டிக்கு ஹேதுவாயிருப்பதால் மாயை என்றும், அந்த மாயையைத் தூண்டுபவனே மஹேஶ்வரன் என்றும் அறியக்கடவன்.]

*இந்த்$_3$ரோ மாயாபி$_4$: புருரூப ஈயதே (ப்$_3$ருஹ 4–5–19)*

[பரமைஶ்வர்யத்தை உடைத்தாயிருப்பதால் இந்த்$_3$ரன் எனப்படும் பரமாத்மா ப்ரக்ருதியாகிற மாயையினால் பல உருவங்களுடன் ஸஞ்சரிக்கிறான்.]

*தை$_3$வீ ஹ்யேஷா கு$_3$ணமயீ மம மாயா து$_3$ரத்யயா।*

*மாமேவ யே ப்ரபத்$_3$யந்தே மாயாமேதாம் தரந்தி தே।। (கீ$_3$தை 7–14)*

[தே$_3$வனாகிற என்னால் நிர்மிக்கப்பட்டதும், முக்கு$_3$ணங்களை உடையதுமான இந்த என்னுடைய மாயை தாண்ட அரிதானது. என்னையே எவர்கள் ஶரணமடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்] முதலான ப்ரமாணங்களாலே சொல்லப்பட்டிருப்பதால் எம்பெருமானுடைய சொத்தான மூலப்ரக்ருதியன்றோ உனக்கு முகத்திரையாயிருக்கிறது. உலகத்தில் முகத்திரையானது, அதை அணிந்து கொண்டிருப்பவர்கள் வெளியிலிருப்பவர்களைக்

பேரைப் புறம்பிலவர் காணுதபடியாய், புறப்பட்டிருக்கும் பேரை உள்ளிருக்குமவர்கள் காணுதபடியாயிற்று இருப்பது. அங்ஙனிருக்கை யன்றிக்கே (ஜக$_3$ந்மோஹிநீ) என்று எம்பெருமானுக்குத் திரோத$_4$ாயிகையா யிருக்கையன்றிக்கே ஜக$_3$த்துக்குத் திரோத$_4$ாயிகையாயிருக்குமென்கிருர்.

(ப்$_3$ரஹ்மேஶாதி$_3$ஸுரவ்ரஜஸ் ஸத$_3$யிதஸ் த்வத்$_3$தா$_3$ஸதா$_3$ஸீக$_3$ண:) பூ$_4$லோகம் தொடங்கி ஸத்யலோகபர்யந்தமாக மேலுள்ள லோகங்களென்ன, அதல, விதல, ஸுதல, பாதாளளோத்தால, ரஸாதல, போ$_4$க$_3$வதீ பர்யந்தமான கீழேழு லோகங்களென்ன, இவற்றில் காணப்பட்டுடையராயிருந்துள்ள தே$_3$வக$_3$ணங்களென்ன, இவர்களுக்குக் கொத்து முதலிகளாயிருந்துள்ள ப்$_3$ரஹ்மருத்$_3$ராதி$_3$களென்ன, ஸரஸ்வதீருத்$_3$ராணீபுலோமஜா ப்ரப்$_4$ருதிகளாயிருந் துள்ள தே$_3$வஸ்த்ரீகளென்ன, அப்ஸரோக$_3$ணங்களென்ன, இவர்களெல்லாரும் ஆணடிமையும், பெண்ணடிமையுமாயிருக்கும் என்கிருர்.

'இவையெல்லாம் யதா$_2$ர்த்த$_2$ம் என்ருே? ஸ்தோத்ரம் என்ருே? இது எங்ஙனே கூடும்படி?' என்ருல்: (ஸ்ரீரித்யேவ ச நாம தே) 'ஸ்ரீ:' என்றன்ருே உனக்குத் திருநாமம் என்கிருர். ''இத்தாலே இவளுக்கு ஸர்வஶேஷிணீத்வமும் தெரிவிக்கப்பட்டதோ?'' என்ருல் : ''ஸ்ரீங் –ஸேவாயாம்'' என்கிற தா$_4$துவாலே,

காணமுடியாமல், வெளியிருப்பவர்கள் உள்ளிருப்பவர்களைக் காணமுடி யாதபடியன்ருே யிருப்பது. அப்படியல்லாமல் (ஜக$_3$ந்மோஹிநீ) என்கையாலே பிராட்டியோடு கூடிய எம்பெருமானுக்கு வெளியிருப்பவற்றை மறைக்காமல், வெளியிலிருக்கும் உலகத்திற்கு அவர்களை மறைப்பதாயன்ருேயிருக்கிறது என்கிருர்.

(ப்$_3$ரஹ்மேஶாதி$_3$ஸுரவ்ரஜஸ் ஸத$_3$யிதஸ்த்வத்$_3$தா$_3$ஸதா$_3$ஸீக$_3$ண:) பூ$_4$லோகம் தொடங்கி ஸத்யலோகம் வரையிலுள்ள மேலுலகங்கள் ஏழும், அதல, விதல, ஸுதல, பாதாள, உத்தால, ரஸாதல போ$_4$க$_3$வதீ என்னும் கீழ் உலகங்கள் ஏழும், இவற்றில் காணப்படும் தே$_3$வஸமூஹங்களும், இவர்களை ஆள்பவர்களான பிரமன், உருத்திரன் முதலான தே$_3$வர்தலைவர்களும், அவர்களுடைய மனைவியரான ஸரஸ்வதீ, கௌரீ, இந்த்$_3$ராணீ முதலான தே$_3$வஸ்த்ரீகளும், அப்ஸரஸ்ஸுக்கள் கூட்டமும் ஆகிய இவர்கள் அனைவரும் ஆண்,பெண் வேலைக்காரர்களாய் இருப்பர் என்கிருர்.

முற்கூறிய பெருமைகள் அனைத்தும் உண்மையானதோ? அல்லது வெறும் துதியோ? இது எப்படி முடியும் என்ருல்; (ஸ்ரீரித்யேவ ச நாம தே) ''ஸ்ரீ:'' என்றன்ருே உனக்குத் திருநாமம் என்கிருர். ''இதனுல் இவள் அனைவராலும் கைங்கர்யம் செய்யப்படுமவள் என்று தேறுமோ'' எனில்; ''ஸ்ரீங் ஸேவாயாம்'' என்கிற தா$_4$துவாலே தன்னைத் தவிர்ந்த சேதநாசேதநங்கள்

தன்னையொழிந்த சேதநாசேதநங்களாலே ஸ்வரூபஸ்தி$_2$திப்ரவ்ருத்திகளுக்காக ஆஶ்ரயிக்கப்படுகிறாள் என்று கொண்டு 'ஶ்ரீ:' என்கிறது. அதுக்கு ப்ரமாணம் "ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம்" என்றும், "அஸ்யேஶாநா ஜக$_3$த:" என்றும் உண்டாகையாலே. (ப$_4$க$_3$வதி) "துர்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபி$_4$ஜந லக்ஷணாம்" என்கிறபடியே எம்பெருமானோடொக்க ஹேயப்ரதிப$_4$டமாயிருந் துள்ள கல்யாணகு$_3$ணைகதாநத்வம் சொல்லப்படுகிறது. "மைத்ரேய ! ப$_4$க$_3$வச்ச$_2$ப்$_3$த$_3$ஸ் ஸர்வகாரணகாரணே । ஸம்ப$_4$ர்த்தேதி ததா$_2$ ப$_4$ர்த்தா ப$_4$காரோ ऽர்த்த$_2$த்$_3$வயாந்வித: ।। நேதா க$_3$மயிதா ஸ்ரஷ்டா க$_3$காரார்த்த$_2$ஸ் ததா$_2$ முநே।।

---

அனைத்தினாலும் தங்கள் ஸ்வரூபம் (ஸத்தை), ஸ்தி$_2$தி (வாழ்வு), ப்ரவ்ருத்தி (செயல்பாடு) ஆகியவை பெறுவதற்காக ஆஶ்ரயிக்கப்படுகிறாள் என்று தேறுமாகையாலே ஶ்ரீ: என்பது உனக்குத் திருநாமமாயிருக்கிறது என்கிறார். இவ்விஷயத்துக்கு

க$_3$ந்த$_4$த்$_3$வாராம் து$_3$ராத$_4$ர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம்।
ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம் தாமிஹோபஹ்வயே ஶ்ரியம்।।(ஶ்ரீஸூக்தம்–9)

[கீர்த்தியைத் தருபவளும், (துஷ்டர்களால்) அடைய முடியாதவளும், எப்போதும் ஸம்ருத்$_3$தி$_4$யை உடையவளும், எல்லா ஸம்பத்துகளையும் உடையவளும், எல்லா பூ$_4$தங்களுக்கும் ஈஶ்வரியுமான ஶ்ரீதே$_3$வியை இங்கு அழைக்கிறேன்.] என்றும்,

"அஸ்யேஶாநா ஜக$_3$தோ விஷ்ணுபத்நீ " (நீளாஸூக்தம், தை.ஸம் 4–4–12)

[இந்த உலகிற்கெல்லாம் ஸ்வாமிநியாகவும், விஷ்ணுவுக்குப் பத்னியாகவும் இருப்பவள்.] என்றும் வேத$_3$ங்களில் உள்ளதன்றோ. (ப$_4$க$_3$வதி)

துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபி$_4$ஜநலக்ஷணாம் ।
ராக$_4$வோऽர்ஹதி வைதே$_3$ஹீம் தம் சேயமஸிதேக்ஷணா।।" (ரா.ஸு.16–5)

[ஒரே வித$_4$மான கு$_3$ணங்கள், வயது, நடத்தை இவைகளை உடையவளும், ஸமானமான குலத்தையும், லக்ஷணங்களையும் உடையவளுமான வைதே$_3$ஹிக்கு ராக$_4$வனே தகுந்தவர். கறுத்தகண்களை உடைய இவளும் அவருக்கே தகுந்தவள்.] என்கிற ஶ்ரீராமாயண ஶ்லோகத்தின்படி எம்பெருமானைப் போலே இவள் தாழ்வுகளுக்கு எதிர்த்தட்டாய், கல்யாண கு$_3$ணங்கள் அனைத்துக்கும் கொள்கலமாய் இருப்பவள் என்று இந்தத் திருநாமத்தால் சொல்லப்படுகிறது. மேலே வ்யாக்யானத்தில் எடுக்கப்பட்டுள்ள விஷ்ணுபுராண ஶ்லோகங்களில் [மைத்ரேயரே ! 'ப$_4$க$_3$வான்' என்னும் ஶப்$_3$த$_3$ம், ஸர்வகாரணங்களுக்கும் காரணபூ$_4$தனான ஸர்வேஶ்வரன் விஷயத்தில் சொல்லப்படுகிறது. '(ப்ரக்ருதியை) கார்யத$_3$ஶையை அடையச் செய்பவன்', 'ஸ்வாமி' என்னும் இரண்டு

ஐஶ்வர்யஸ்ய ஸமக்3ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரிய:। ஜ்ஞாநவைராக்3யயோஶ் சைவ ஷண்ணாம் ப4க3 இதீரணா॥ வஸந்தி தத்ர பூ4தாநி பூ4தாத்மந்யகி2லாத்மநி। ஸ ச பூ4தேஷ்வஶேஷேஷு வகாரார்த்த2ஸ் ததோऽவ்யய:॥ ஜ்ஞாநஶக்தி ப3லைஶ்வர்ய வீர்யதேஜாம்ஸ்யஶேஷத:। ப4க3வச்ச2ப்3த3வாச்யாநி விநா ஹேயைர்கு3ணாதி3பி4:॥ ஏவமேஷ மஹா ஶப்3தே3ா மைத்ரேய! ப4க3வாநிதி। பரமப்3ரஹ்மபூ4தஸ்ய வாஸுதே3வஸ்ய நாந்யக3:॥ தத்ர பூஜ்யபதா3ர்த்தோ2க்தி பரிபா4ஷாஸமந்வித:। ஶப்3தோ3ऽயம் நோபசாரேண த்வந்யத்ர ஹ்யுபசாரத:॥'' என்று கொண்டு ப்ரமாணமுண்டாகையாலே, ஶ்ரிய:பதியை நிர்தே3ஶிக்கும் போது ''ப்ரதி3ஶது ப4க3வாநஶேஷபும்ஸாம்'' என்றும்,

---

அர்த்த2ங்களுடன் கூடியது ப4காரம்; முனிவரே! அப்படியே 'ரக்ஷிப்பவன், ஸம்ஹரிப்பவன், ஸ்ருஷ்டிப்பவன்' என்பது க3காரத்தின் அர்த்த2ம். ஸம்பூர்ணமான ஐஶ்வர்யம், வீர்யம், யஶஸ், செல்வம், ஜ்ஞானம், வைராக்3யம் என்னும் இந்த ஆறு கு3ணங்களுக்கும் 'ப4க3' என்னும் பத3ம் வாசகமா யிருக்கிறது. பூ4தங்களை ஶரீரமாகக்கொண்டவனும், எல்லாவற்றுக்கும் ஆத்மாவாயிருப்பவனுமான அவனிடத்தில் பூ4தங்கள் வஸிக்கின்றன. அவனும் எல்லா பூ4தங்களிலும் வஸிக்கிறான். ஆகையால் அழிவற்றவனான ப4க3வான் வகாரத்துக்கு அர்த்த2மாகிறான். கீழானவையான முக்கு3ணங்கள் முதலியவற்று டன் சேராத 'ஜ்ஞானம்' ஶக்தி, ப3லம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ்' என்னும் எல்லா கு3ணங்களும், 'ப4க3வாந்' என்னும் ஶப்3த3த்தினால் சொல்லப்படுகின் றன. மைத்ரேயரே! இம்மாதிரியாக ப4க3வான் என்னும் இந்த மஹா ஶப்3த3ம் பரப்3ரஹ்மமான வாஸுதே3வனுக்கே உரித்தானது. வேறொருவரையும் குறிக்காது. 'பூஜிக்கத்தக்க பொருளைக் குறிப்பது' என்னும் பரிபா4ஷையுடன் கூடிய இந்த ஶப்3த3ம் அவன் விஷயத்தில் ஔபசாரிகமாக சொல்லப்படு வதில்லை. மற்ற விஷயங்களில் ஔபசாரிகமாகச் (அமுக்2யமாக) சொல்லப் படுகிறது.] என்று சொல்லப்பட்டதன்றோ. திருவின்நாயகனைப் பற்றிச் சொல்லும்போது

இதி விவித4மஜஸ்ய யஸ்ய ரூபம் ப்ரக்ருதிபராத்மமயம் ஸநாதநஸ்ய।
ப்ரதி3ஶது ப4க3வாநஶேஷபும்ஸாம் ஹரிரபஜந்மஜராதி3காம் ஸ ஸித்3தி4ம்॥

*(வி.பு.6–8–64)* [பிறப்பற்றவனும், பழமையானவனுமான எந்த விஷ்ணுவுக் குப் பலவிதமான ப்ரக்ருதியென்ன, (அதைக்காட்டிலும் மேலான) திவ்ய மங்களவிக்ரஹமென்ன, ஆத்மஸ்வரூபமென்ன, இவை இம்மாதிரியாக ஶரீரங் களாயிருக்கின்றனவோ, அந்த பகவான் ஹரி எல்லா மனிதர்களுக்கும், பிறப்பு, மூப்பு முதலியவைகளைப் போக்கடிக்கும் மோக்ஷஸித்3தி4யை அருளுவானாக] என்றும்,

"ஸ்மர்த்தவ்யோ ப$_4$க$_3$வாந் ஹரி:" என்றும், "ப$_4$க$_3$வாந் பூ$_4$தைர் ப$_3$ால: க்ரீட$_3$நகைரிவ" என்றும், "ப$_4$க$_3$வந் நாராயண" என்றும் இப்படி வ்யவஹரிக்கவடுப்பதாயிறே இருப்பது. அவனை நிர்தே$_3$ஶிக்கும்போது "ப$_4$க$_3$வதீம் ஶ்ரியம் தே$_3$வீம்", "ஶ்ரீரித்யேவ ச நாம தே ப$_4$க$_3$வதி" என்னும் படியாயிருக்கும்.

(ப்$_3$ரும: கத$_2$ம் த்வாம் வயம்) ஈஶ்வரகு$_3$ணஸ்தவம் பண்ணும்போது "அநந்தா வை வேத$_3$ா:" என்கிற வேத$_3$ங்களுமகப்பட, "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" என்றுகொண்டு அளவுகோல் முறிந்து

---

*மஹத்யாபதி$_3$ ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ ப$_4$க$_3$வாந் ஹரி: (?)*
[பேராபத்து வந்த காலத்தில் ப$_4$க$_3$வானை ஹரி நினைக்கத்தகுந்தவன்.]என்றும்,

*அநியோஜ்யோऽப்ரமேயஶ்ச யஸ்து காமஶரீரத்$_4$ருத்।*
*மோத$_3$தே ப$_4$க$_3$வாந் பூ$_4$தைர் ப$_3$ால: க்ரீட$_3$நகைரிவ।। (ப$_4$ா.ஸப$_4$ா 40–78)*

[ஏவப்படாதவனும், அறியமுடியாதவனும், இஷ்டப்பட்ட உருவங்களை த$_4$ரிப்பவனுமான ப$_4$க$_3$வான், சிறுவன் விளையாட்டுக்கருவிகளுடன் விளையாடுவதுபோல் பூ$_4$தங்களுடன் விளையாடி ஸந்தோஷிக்கிறான்.] என்றும், "ப$_4$க$_3$வந்நாராயண"(ஶரணாக$_3$தி க$_3$த்$_3$யம்–1) [ப$_4$க$_3$வானை நாராயணன்] என்றும், இப்படி பகவச்சப்தத்தையிட்டுச் சொல்லும்படியன்றோ இருப்பது. அவளைச் சொல்லும்போதும் "பகவதீம் ஶ்ரியம் தேவீம்" [பூஜிக்கத்தக்கவளும், எம்பெருமானைத் தவிர்ந்த அனைவராலும் ஆஶ்ரயிக்கப்படுபவளும், ஒளிவீசும் திருமேனியையுடையவளுமான பெரியபிராட்டியார்], "ஶ்ரீரித்யேவ ச நாம தே ப$_4$க$_3$வதி" [கல்யாணகுணங்களால் நிறைந்தவளே! உன் திருநாமமும் ஶ்ரீ என்பதேயாயிருக்கிறது] என்கிறபடியே 'பகவதி' என்றே சொல்லும்படியாயிருக்கிறாள்.

(ப்$_3$ரும: கத$_2$ம் த்வாம் வயம்) ஸர்வேஶ்வரனுடைய கு$_3$ணங்களைத் துதிக்கும்போது "அநந்தா வை வேத$_3$ா:" [வேத$_3$ங்கள் அளவற்றவை.],

*யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ।*
*ஆநந்தம் ப்$_3$ரஹ்மணோ வித்$_3$வாந் ந பி$_4$பே$_3$தி குதஶ்சநேதி।। (தை.ஆந 9–1)*

[எந்த ப்$_3$ரஹ்மத்திலிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்குக்கள், (அதை) அளவிட்டறியாமல் திரும்புகின்றனவோ, அந்தப் பரமாத்வாவின் ஆநந்த$_3$த்தை அறிந்தவன் எதனிடமும் ப$_4$யப்படமாட்டான்.]என்கிறபடியே வேத$_3$ங்களுங் கூட அவனை அளக்க முடியாமல் திரும்பும்படியன்றோயிருப்பது.

பே$_4$ாகே$_3$ாபோத்$_3$க$_4$ாதகேளீ சுளகித ப$_4$க$_3$வத்$_3$வைஶ்வரூப்யாநுப$_4$ாவா
*ஸா ந: ஶ்ரீ: (ஶ்ரீகு$_3$ணரத்நகோஶம் 4)*

மடங்கும்படியாயிறே இருப்பது. அவன் தன்னையுமகப்பட சுலகித ப$_4$க$_3$வத்$_3$ வைஶ்வரூப்யையாயிருந்துள்ள உன்னை மந்த$_3$மதிகளுக்கு அக்$_3$ரேஸரராயிருந் துள்ள நாங்கள் என் சொல்லி வ்யவஹரிப்பது? என்று கொண்டு பிராட்டியினு டைய பரத்வத்தை ப்ரதிபாதி$_3$க்கிறார் ஆளவந்தார். *(1)*

2. यस्यास्ते महिमानमात्मन इव त्वद्वल्लभोऽपि प्रभु:
नालं मातुमियत्तया निरवधिं नित्यानुकूलं स्वत: ।
तां त्वां दास इति प्रपन्न इति च स्तोष्याम्यहं निर्भयो
लोकैकेश्वरि ! लोकनाथदयिते! दान्ते! दयान्ते विदन् ।।

---

[ப$_4$க$_3$வானுடைய விஶ்வரூபானுப$_4$வத்தையும், தன்னுடைய பே$_4$ாக$_3$ாரம்ப$_4$மா கிற விளையாட்டாலே கையளவாக ஆக்குபவளான அந்த ஶ்ரீதே$_3$வி.] என்கிறபடியே எம்பெருமானுடைய விஶ்வரூபானுப$_4$வமும் ''இவள் கைக்குள் அடங்கியது'' என்று சொல்லும்படியிருக்கும் உன்னுடைய பெருமையை அறிவிலிகளின் முன்னணியில் இருக்கும் நாங்கள் என் சொல்லிக் கூறுவோம் என்று சொல்லிக்கொண்டு, இந்த ஶ்லோகத்தாலே பிராட்டியினுடைய மேன்மையை அருளிச்செய்கிறார் ஆளவந்தார். *(1)*

2. யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந இவ த்வத்$_3$வல்லபே$_4$ாऽபி ப்ரபு$_4$:
நாலம் மாதுமியத்தயா நிரவதி$_4$ம் நித்யாநுகூலம் ஸ்வத: ।
தாம் த்வாம் தா$_3$ஸ இதி ப்ரபந்ந இதி ச ஸ்தோஷ்யாம்யஹம் நிர்ப்ப$_4$யோ
லோகைகேஶ்வரி ! லோகநாத$_2$த$_3$யிதே! தா$_3$ந்தே ! த$_3$யாந்தே வித$_3$ந் ।।

**பதவுரை:–** **லோகைகேஶ்வரி** – லோகத்திற்கு ஒரே ஈஶ்வரியாயிருப்பவளே!, **லோகநாத$_2$த$_3$யிதே** – லோகங்களுக்கெல்லாம் ஸ்வாமியான எம்பெருமானுக்கு ப்ரியமஹிஷியாயிருப்பவளே! **தா$_3$ந்தே** – கருணைகல்பவல்லியே! **யஸ்யா தே** – எந்த உன்னுடைய ,**நிரவதி$_4$ம்** – அளவற்றதும், **ஸ்வத: நித்யாநுகூலம்** – இயற்கையாகவே (ப$_4$க$_3$வானுக்கு) எப்போதும் அநுகூலமாயிருப்பதுமான, **மஹிமாநம்** – பெருமையை, **ப்ரபு$_4$: த்வத்$_3$வல்லப$_4$: அபி** – ஈஶ்வரனை உன்னுடைய வல்லப$_4$னும், **ஆத்மந: இவ** – தன்னுடைய பெருமையைப் போல், **இயத்தயா** – இவ்வளவென்று, **மாதும் ந அலம்** – அளவிட்டறிய மாட்டானே, **தாம் த்வாம்** – அப்படிப்பட்ட உன்னை , **தா$_3$ஸ: இதி** – 'தாஸன்' என்றும், **ப்ரபந்ந: இதி ச** – 'ஶரணமடைந்தவன்' என்றும், **தே த$_3$யாம் வித$_3$ந் அஹம்**– உன்னுடைய கருணையை அறியும் நான், **நிர்ப்ப$_4$ய:**– ப$_4$யமற்றவனாய், **ஸ்தோஷ்யாமி** – துதிக்கிறேன்.

**வ்யா.–** (யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந இவ த்வத்$_3$வல்லபே$_4$ாऽபி ப்ரபு$_4$ர் நாலம் மாதுமியத்தயா நிரவதி$_4$ம் நித்யாநுகூலம் ஸ்வத:) ''யஸ்யாயுதாயுதாம் ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்தி$_2$தா'' என்றும், ''ஸ்வஶக்திலேஶோத்$_3$த்$_4$ருத பூ$_4$தஸர்க்க$_3$:'' என்றும், ''மநஸைவ ஜக$_3$த்ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரஞ்ச கரோதி ய:'' என்றும், ''பராஸ்ய ஶக்திர் விவிதை$_4$வ ஶ்ரூயதே ஸ்வாப$_4$ாவிகீ ஜ்ஞாந ப$_3$லக்ரியா ச'' என்றும், ''ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்'' என்றும், ''தி$_3$வ்யோ

---

**வ்யா.–** *(யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந இவ த்வத்$_3$வல்லபே$_4$ாऽபி ப்ரபு$_4$ர் நாலம் மாதுமியத்தயா நிரவதி$_4$ம் நித்யாநுகூலம் ஸ்வத:)*

*யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்தி$_2$தா।*
*பரப்$_3$ரஹ்மஸ்வரூபஸ்ய ப்ரணமாமஸ்தமவ்யயம்।। (வி.பு.1–9–53)*

*[பரப்$_3$ரஹ்மஸ்வரூபியான எவனுடைய பல்லாயிரத்தில் ஒரு ப$_4$ாக$_3$த்தில் உலக மாகிற ஶக்தி நிலைநிற்கிறதோ, குறைவற்றவனான அவனை வணங்குகிறோம்.]*

*ஸமஸ்தகல்யாணகு$_3$ணாத்மகோऽஸௌ*
*ஸ்வஶக்திலேஶோத்$_3$த்$_4$ருதபூ$_4$தஸர்க்க$_3$:।*
*இச்ச$_2$ாக்$_3$ருஹீதாபி$_4$மதோருதே$_3$ஹஸ்*
*ஸம்ஸாதி$_4$தாऽஶேஷஜக$_3$த்$_3$தி$_4$தோऽஸௌ।। (வி.பு.6–5–84)*

*[இந்த ப$_4$க$_3$வான் ஸகலகல்யாணகு$_3$ணங்களையும் இயற்கையாகவே உடையவன்; தன்னுடைய ஶக்தியில் ஒரு சிறிய பகுதியினாலேயே த$_4$ரிக்கப்பட்ட பூ$_4$தங்களை உடையவன்; இச்சையினாலேயே எடுக்கப்பட்டவையும், இஷ்டமானவையுமான பல தே$_3$ஹங்களை உடையவன்; இவன் எல்லா ஜக$_3$த்துக்கும் நம்மையைச் செய்பவன்.]*

*மநஸைவ ஜக$_3$த்ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரஞ்ச கரோதி ய:।*
*தஸ்யாரிபக்ஷக்ஷபணே கியாநுத்$_3$யமவிஸ்தர:।। (வி.பு.5–22–15)*

*[எவனொருவன் மனத்தினாலேயே உலகத்தின் ஸ்ருஷ்டியையும், ஸம்ஹாரத்தையும் செய்கிறானோ; அவனுக்கு எதிரிகளை நிரஸிப்பதில் என்ன பெருமுயற்சி வேண்டும்?]*

*பராஸ்ய ஶக்திர் விவிதை$_4$வ ஶ்ரூயதே ஸ்வாப$_4$ாவிகீ ஜ்ஞாநப$_3$லக்ரியா ச। (ஶ்வே 6) [இந்தப் பரமாத்மாவுக்குப் பலபடிப்பட்டதும், மேலானதுமான ஶக்தியும், இயற்கையான ஞானமும், ப$_3$லமும், (ஸ்ருஷ்டித்தல் முதலிய) காரியங்களும் உண்டென்று அறியப்படுகிறது.]*

*ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்। ந ப்$_3$ரஹ்மா நேஶாந:।நேமே த்$_3$யாவா ப்ருதி$_2$வீ। … ஸ ஏகாகீ ந ரமேத।। (மஹோபநிஷத்) [நாராயணன் ஒருவனே இருந்தான்;*

தே₃வ ஏகோ நாராயண:'' என்றும் இப்படி ப்ரமாணங்களாலே ப்ரதிபாதி₃க்கப்பட்ட பரத்வத்தை உடையவனாய், உனக்கு வல்லப₄னான ஸர்வேஶ்வரனுமகப்பட, யச்ச₂ப்₃த₃த்தாலே அவாங்மநஸகோ₃சரமாயிருக்கிற உன்னுடைய அளவிறந்திருக்கிற பெருமையை இவ்வளவென்று நிரூபிக்குமளவில், ''தனக்கும் தன் தன்மையறிவரியான்'' என்கிறபடியே தன் வைப₄வ நிரூபணம் பண்ணத் தான் மாட்டாதாப்போலே உன்னுடைய வைப₄வ நிரூபணம் பண்ணும்போது அஸமர்த்த₂னாயிருக்கும். 'ஆனால் ஜக₃த்துக்கு ஶேஷித்₃வித்வம் உண்டோ? என்றால், (நித்யாநுகூலம் ஸ்வத:) ''அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணுபத்நீ'' என்கையாலே ஜக₃த்தைப்பற்ற இவளுக்கு ஶேஷிணீத்வமும், அவனைப்பற்ற ஶேஷத்வமும் ப்ரதிபாதி₃க்கப்படுகையாலே ஶேஷித்₃வித்வமில்லை. 'ஆனால் இவனைப்பற்ற இவள் ஶேஷபூ₄தையாகில், இவளுடைய வைப₄வநிரூபணம் பண்ணவொண்ணாதே' என்னவொண்ணாது. அதெங்ஙனேயென்னில்; ''அபூர்வநாநாரஸப₄ாவநிர்ப்ப₄ர ப்ரப₃த்₃த₄யா முக்₃த₄ வித₃க்₃த₄லீலயா''

---

*பிரமனுமில்லை சிவனுமில்லை; இந்த ஆகாஶமும், பூமியுமில்லை ...அவன் ஒருவனாயிருந்து ஆநந்த₃த்தை அடையவில்லை.]*

*ஏஷ ஸர்வபூ₄தாந்தராத்மாऽபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:।*

*(ஸுப₃ாலோபநிஷத்–7)[ ஸர்வபூ₄தங்களுக்கும் அந்தர்யாமியாயிருப்பவனும், தோ₃ஷமற்றவனும், ஶ்ரீவைகுண்ட₂த்தில் வஸிப்பவனும், தே₃வனுமான நாராயணன் ஒருவனே.] என்னும் ப்ரமாணங்களாலே விளக்கப்பட்ட மேன்மையை உடையவனாய், உனக்கு இனிய கணவனான ஸர்வேஶ்வரனுங் கூட, வாக்குக்கும், மனத்துக்கும் எட்டாமலிருக்கும் உன்னுடைய அளவற்ற பெருமையை அளக்கப் புகுந்தால், 'தனக்கும் தன்தன்மை அறிவரியான்'' (திருவாய் 8–4–6) என்கிறபடியே, தன்னுடைய பெருமையைத் தான் காணமுடியாதது போலே, உன்னுடைய பெருமையைக் காண்பதற்கும் இயலாதவனாயிருப்பான். அப்படியானால் உலகத்திற்கு இருவர் தலைவர்களோ எனில்; (நித்யாநுகூலம் ஸ்வத:) ''அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணுபத்நீ'' என்கிற ப்ரமாணத்தின்படி உலகிற்கு இவள் தலைவியாயிருந்தபோதிலும், அவனுக்கு அடிமைப்பட்ட மனைவி என்கையாலே இரண்டு தலைவர்கள் இல்லை. அப்படி எம்பெருமானுக்கு பிராட்டி அடிமைப்பட்டவளானால் இவளுடைய பெருமையை அவன் அளவிடக்கூடியவன் என்று ஆகுமே எனில், ஆகாது. எப்படியெனில்; ''அபூர்வநாநாரஸப₄ாவநிர்ப்ப₄ரப்ரப₃த்₃த₄யா முக்₃த₄வித₃க்₃த₄ லீலயா।'' (ஸ்தோ.ரத் 44)*

என்று அதிவித$_3$க்$_3$த$_4$மாயிருந்துள்ள க்ரீட$_3$ா வைப$_4$வத்தாலே ''பித்தர் பனிமலர் மேல் பாவைக்கு'' என்கிறபடியே ப்ரேமபரவஸனுயிருக்கையாலே ஸர்வஜ்ஞனுயிருந்தானேயாகிலும் நிரூபிக்க மாட்டாதேயாய்த்து இருப்பது.

(தாம் த்வாம்) கீழ் ப்ரதிபாதி$_3$க்கப்பட்ட பரத்வத்தை நிரூபகத$_4$ர்மமாக உடையையாயிருக்கிற உன்னை என்றபடி. (த$_3$ாஸஇதி) 'அடியேன்' என்று கொண்டு ஆஶ்ரயிக்கிறேன் என்கிருர். ''ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம்'' என்றும், ''அஸ்யேஶாநா ஜக$_3$த:'' என்றும் சொல்லுகையாலே, நமக்கு ஜக$_3$த்தைப் பற்ற ஶேஷிணீத்வம் ஸாத$_4$ாரணமன்றே? உமக்கு அவர்களிற்காட்டில் விஶேஷமென்? என்று பிராட்டி அருளிச்செய்தார். 'அவர்களிற்காட்டில் நெடுவாசியுண்டே; ஸ்வரூபாநுரூபமான ஶேஷத்வபூர்வகமாக ப்ரபந்நனுனேன்' என்கிருர், –(ப்ரபந்ந இதி ச) என்று கொண்டு. (ஸ்தோஷ்யாம் யஹம் நிர்ப்ப$_4$ய:) அதினுலே நிர்ப்ப$_4$யனுய்க்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணுகிறேன்

---

[(க்ஷணந்தோறும்) புதிதாயிருக்கும் பலவகை ரஸங்களாலும் நெருங்கிச் சேர்ந்திருப்பதும், அழகியதாகவும், ஸாமர்த்யத்துடன் கூடியதாகவுமிருக்கும் விளையாட்டாலே)] என்கிறபடியே அழகியதாகவும், பெருமையுடன் கூடியதாகவும் இருக்கும் விளையாட்டாலே ''பித்தர் மனிமலர்மேல் பாவைக்கு'' *(திருநெடு–18)* என்கிறபடியே காதலுக்கு வஶப்பட்டிருப்பவனுகையாலே எல்லாமறிந்தவனுயிருந்தபோதிலும், இவளுடைய பெருமையை அறியமுடியாதவனுகவேயிருப்பான்.

*(தாம் த்வாம்)* கீழே சொல்லப்பட்ட மேன்மையைத் தனித்தன்மையாகக் கொண்ட உன்னை என்று பொருள். (த$_3$ாஸ இதி) உனக்கு அடிமையென்னும் ஆகாரத்தாலே பற்றுகிறேன் என்கிருர் மூன்றுமடியாலே.

''ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம்'' *(ஸ்ரீஸூக்தம் –9)* [எல்லா பூதங்களுக்கும்ஈஶ்வரியும்.] என்றும், ''அஸ்யேஶாநா ஜக$_3$த:'' *(நீளா ஸூக்தம்)* [இந்த உலகிற்கெல்லாம் ஸ்வாமிநியாக இருப்பவள்.] என்றும் சொல்லுகையாலே 'நாம் உலகத்திற்குத் தலைவியாயிருப்பது அனைவருக்கும் பொதுவன்றே; உமக்கு என்ன சிறப்புள்ளது' என்று பிராட்டி அருளிச்செய்தார். அதற்கு 'மற்றவர்களைக் காட்டிலும் எனக்கு மிகவும் சிறப்புண்டு. ஜீவாத்ம ஸ்வரூபத்துக்குத் தக்கபடி உமக்கு அடிமையாயிருந்து கொண்டு ஶரணுகதனுகவுமிருக்கிறேன்' என்கிருர். ''த$_3$ாஸ இதி ப்ரபந்ந இதி ச'' என்னும் பகுதியாலே. *(ஸ்தோஷ்யாம்யஹம் நிர்ப்ப$_4$ய:)* இப்படி அடிமையாகவும், ப்ரபந்நனுகவுமிருக்கையாலே ப$_4$யமற்றவனுய் உன்னைத் துதிக்கிறேன் என்கிருர். துதியாவது – இல்லாத பெருமையை ஏறிட்டுச் சொல்லுவதாயிருக்குமே, அப்படியோ எனில்,

என்கிறார். ஸ்தோத்ரமாகிறது இல்லாததொன்றைச் சொல்லுகையாயிருக்கும். இங்குத்தைக்கு அங்ஙனல்ல. ''பூ$_4$தார்த்த$_2$வ்யாஹ்ருதிஸ் ஸா ஹி ந ஸ்துதி: பரமேஷ்டி$_2$ந:'' என்கிறபடியே உள்ள கு$_3$ணங்களைத்தான் யத$_2$ாவத் ப்ரபாதி$_3$க்கப் போகாதேயாய்த்து இருப்பது. இவையும் எத்தாலேயென்றால்: (லோகைகேஸ்வரி) ஜக$_3$த்தைப்பற்ற இவள் ஶேஷிணியாகையாலே. இவளுக்கு ஜக$_3$த்தைப் பற்ற ஸ்வாமிநீத்வம் எத்தாலே வந்ததென்றால்: (லோகநாத$_2$த$_3$யிதே) லோகநாத$_2$னாயிருக்கிற நாராயணனுக்கு தி$_3$வ்யமஹிஷியாகையாலே.

''இங்ஙனொத்த மேன்மையை உடையோமான நம்மை உம்மால் பரிச்சே$_2$தி$_3$க்கப்போமோ?'' எனப்பிராட்டி திருவுள்ளமாக, ''அது ஒக்கும்; உம்முடைய மேன்மையை நிரூபித்தோமாகிலன்றோ நாங்கள் ப$_4$ங்கு$_3$ரதீ$_4$களாவது. உம்முடைய நீர்மையை நிரூபிக்கும் போது மந்த$_3$மதிகளாயிருந்துள்ள அஸ்மத$_3$ாதி$_3$களுக்கும் ஸ்தோத்ரம் பண்ணுகையிலே யோக்$_3$யதையுண்டாம்'' என்கிறார். (த$_3$ாந்தே) கருணோஜ்ஜ்வலஸம்வர்த்தி$_4$தையாயிருக்கிற கற்பகக் கொடியே! (த$_3$யாம் தே வித$_3$ந்) த$_3$யையாவது, – ''ஸ்வார்த்தநிரபேக்ஷா

---

*அப்படியல்ல.*

*இதி ப்ரஸாத$_3$யாமாஸுஸ் தே ஸுராஸ் தமதோ$_4$க்ஷஜம்।*

*பூ$_4$தார்த்த$_2$வ்யாஹ்ருதிஸ் ஸா ஹி ந ஸ்துதி: பரமேஷ்டி$_2$ந:॥ (ரகு$_4$வம்ஶம் 10–33) [அந்த தேவர்கள் இந்த்ரியங்களால் அறியமுடியாதவனான அந்த எம்பெருமானை இம்மாதிரி உகப்பித்தார்கள். பரமபத$_3$த்தில் வாழ்பவனான அவன் விஷயத்தில் அது உண்மையான விஷயத்தைச் சொல்லுமதேயன்றோ; (இல்லாத விஷயத்தை ஏறிட்டுச் சொல்லும்) ஸ்தோத்ரமல்லவே.] என்கிறபடியே பெருமாளுக்குப் போலே பிராட்டிக்கும் உள்ள குணங்களை உள்ளபடி சொல்ல முடியாமலாயிற்று இருப்பது. எதனாலேயெனில் (லோகைகேஸ்வரி) உலகிற்கு இவள் தலைவியாகையாலே. இவளுக்கு, உலகிற்குத் தலைவியாயிருக்கும் தன்மை எப்படி வந்ததெனில் (லோகநாத$_2$த$_3$யிதே) உலகிற்கெல்லாம் தலைவனாயிருக்கும் நாராயணனுக்கு இவள் அப்ராக்ருதமான பட்டமஹிஷியாகையாலே.*

*''இப்படிப்பட்ட மேன்மையையுடைய நம்மை உம்மால் அளவிடமுடியுமோ?'' என்று பிராட்டி திருவுள்ளத்தில் எண்ண, ''உண்மை. உம்முடைய மேன்மையை பார்த்தோமாகிலன்றோ, நாங்கள் உம்மைத் துதிக்கமுடியாமலிருப்பது. உம்முடைய நீர்மையைப் பார்க்கும்போது புல்லறிவாளர்களான எங்களுக்கும் துதிக்கையில் தகுதியுண்டன்றோ'' என்கிறார். (த$_3$ாந்தே) விளி. கருணையினாலே மிகவும் வளர்ந்திருக்கும் கற்பகக்கொடியே. (த$_3$யாம் தே வித$_3$ந்)*

